குறிப்பிட்டார்கள். பக்கத்தில் இருந்த குளம் தூர்ந்துபோய் இருக்கிறது. அது முக்கால் ஏக்கர் பரப்பு இருக்கும். அதனால்தான் அங்கு பஸ் நிலையம் அமைக்கவேண்டுமென்ற கோரிக்கை சமர்ப்பிக்கப்பட்டது.

THE HON. SRI P. KAKKAN : சம்பந்தப்பட்ட அதிகாரிகள் இதுபற்றியெல்லாம் பரிசீலனை செய்துதான் ஒரு முடிவுக்கு வந்திருக்கிறார்கள். இப்பொழுது அந்த முடிவை ஏற்றுக் கொள்வது நல்லது என்று கனம் அங்கத்தினர் அவர்களுக்குத் தெரிவித்துக்கொள்கிறேன்.

*Land Tax.*

* 1582 *Q.*—SRI R. SRINIVASA IYER (on behalf of SRI M. D. THIAGARAJAN) : கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க் கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

தஞ்சாவூர் ஜில்லாவில் உள்ள சர்க்கார் நஞ்சை நிலங்களுக் கும் இனம் புஞ்சையில் நஞ்சை நிலங்களுக்கும் தீர்வையில் உள்ள வித்தியாசத்தைப் போக்க உத்தேசமுண்டா?

THE HON. SRI M. A. MANICKAVELU : No, Sir.

11-30 a.m. SRI R. SRINIVASA IYER : இனம் புஞ்சை நிலங்களில் சர்க்கார் தண்ணீரைப் பாய்ச்சி, நஞ்சை சாகுபடி செய்தால், புஞ்சைத் தீர்வையும், தண்ணீர்த் தீர்வையும் அதற்குள்ள செஸ்ஸும் சேர்த்துச் செலுத்துவதென்றால், அது பக்கத்திலே இருக்கும் ரயத்துவாரி நஞ்சை நிலத்திற்கான தீர்வையைக் காட்டிலும் கிட்டத்தட்ட இரண்டு பங்கு ஆகிறது. ஸ்ரீ எஸ். ஒய். கிருஷ்ணசாமி அவர்கள் காவிரி-மேட்டூர் ப்ராஜெக்ட் பாசனப் பிரதேசம் சம்பந்தமாக சமர்ப்பித்த ரிப்போர்ட்டில், தண்ணீர்த் தீர்வையையும் நிரந்தரமாக ஜலம் பாயக்கூடிய புஞ்சைத் தீர்வையையும் ஒன்றாக 'கன்ஸாலிடேட்' பண்ணவேண்டு மென்று சொல்லியிருக்கிறார். அப்படிக் கன்ஸாலிடேட் பண்ணும் நோக்கம் சர்க்காருக்கு உண்டா? பட்டுக்கோட்டை, அறந்தாங்கி தாலூகாக்களைப் பொறுத்தமட்டிலும் புஞ்சையில் தண்ணீர் ஐந்து வருஷங்களாகப் பாய்ந்தாலும், அதை நஞ்சையாக மாற்றக் கூடாது என்று அரசாங்கம் புதிதாக உத்திரவு போட்டிருக்கிறது. ஆனால், தஞ்சை ஜில்லாவின் இதர தாலூகாக்களைப் பொறுத்த வரையில் வேறு விதமாக இருக்கிறது. இந்த வித்தியாசத்தைப் போக்க சர்க்காருக்கு உத்தேசம் இருக்கிறதா?

THE HON. SRI M. A. MANICKAVELU : இப்பொழுது கையாளுகிற முறை தற்காலிகமானது. அடுத்திருக்கும் ரயத்துவாரி நிலங்களுக்கு எப்படித் தீர்வை செலுத்துகிறார்களோ அம்மாதிரியே இதற்கும் இருக்கிறது. ஆனால், இனம் பிராந்தியத் தில் 'ஸெட்டில்மென்ட்' ஆனபிறகு ஒரு ஒழுங்குக்கு வந்துவிடும். அதுவரையில், தற்காலிகமாக இம்மாதிரி முறை இருக்கும்.

18th September 1961]

SRI N. K. PALANISAMI : Even with regard to wet lands, in some places, a sum of Rs. 4 is collected and in other places a sum of Rs. 8 and even Rs. 12 is collected. May I know whether there is any proposal to levy the tax uniformly in all places?

THE HON. SRI M. A. MANICKAVELU : ஒழுங்காக ஒரு யூனிபாரம் வரி வரவேண்டுமென்று சொன்னால் முடிவாக இப் பிரச்சனை தீர்க்கப்பட்டவுடன்தான் வரும். அதுவரையில் இப்போது தாற்காலிகமாக அடுத்து எப்படி இருக்கிறதோ அதைப் பார்த்துப் போட்டிருக்கிறோம். கொஞ்சம் வித்தியாசம் ஏற்பட்டாலும் ஏற்படலாம்.

SRI R. SRINIVASA IYER : கனம் அமைச்சர் அவர்கள் இனாமாக உள்ளதற்குச் சொன்னார். நான் இனாமாக இருந்து ரயத்துவாரி கிராமமாக மாற்றப்பட்டிருப்பதிலேயே கூட புஞ்சையை புஞ்சையாக வைத்துத் தண்ணீர் தீர்வையையும் தனியாக வைத்து வாங்கப்படுகிறதே, இது இரண்டையும் ஒன்றாக இணைத்து வைத்தால்—ரயத்துவாரியைவிட அதிக வித்தியாசம் இல்லாதபடி இருக்காதா? அதற்கு உத்தரவு போடுவார்களா?

THE HON. SRI M. A. MANICKAVELU : கனம் அங்கத்தினர் சொன்னது வேறு விஷயம். அதற்குத் தனியாகக் கேள்வி போட்டால் பதில் சொல்கிறேன்.

* 1583 *Q.*—SRI T. S. RAMASWAMI : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether the land tax was raised in Kanyakumari district this year;

(*b*) if so, under what law and by how much;

(*c*) whether it is a fact that village officers are forced to collect this year's land tax during the first quarter in advance; and

(*d*) if so, the reasons therefor?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) & (*b*) : Under the Madras Coinage (Alteration of References) Act, 1960, sub-section (1) of section 5 of the Travancore-Cochin Land Tax Act, 1955, which is in force in Kanyakumari district, has been amended altering the rate of basic tax from three pies per cent of land per annum to two naye paise per cent of land per annum. The amendment has effect from 1-4-61. As a result of the amendment, the rate of basic tax per acre per annum in Kanyakumari district has increased by 44 nP.

(*c*) No such instructions were issued in this regard.

(*d*) Does not arise.

SRI T. S. RAMASWAMI : May I know whether any circular was issued to the village officers to collect the annual tax in advance in the first quarter?

THE HON. SRI M. A. MANICKAVELU : No such instruction was issued.